மலர் 13 இதழ் 277 NAVAMANI (Tamil Daily) MADRAS 4 பக்கம் 25 காசு

Regd M No. 7897 Phone No. 76190: 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 21-6-75 சனி வெளியூர் 22-6—75 ஞாயிறு



## சென்னையில் 3 நாட்களுக்கு ஒருமுறைதான் குடிதண்ணீர் சப்ளை

# ஜூலை 2-ந் தேதி ஆரம்பம்

## அந்தோணி அறிவிப்பு

சென்னை, ஜூன் 21—சென்னை மாநகரில் குடிநீர் பஞ்சம் மேலும் கடுமையாக ஆகிவிட்டது. ஆகவே வருகிற ஜூலை மாதம் 2-ந் தேதியிலிருந்து 3 நாட்களுக்கு ஒரு தடவை குடிநீர் சப்ளை செய்யப்படும் என்று சென்னை மாநகராட்சி தனி அதிகாரி டி. வி. அந்தோணி இன்று நிருபர்களிடம் கூறினார்.

புழலேரியில தண்ணீர் வரண்டுவிட்டது ஆங்காங்கு குழம்பிய நிலையில நீர்த்தேக்கங்கள்தான் காணப்படுகின்றன புழலேரியில உள்ள தண்ணீருடன் தாமரைப்பாக்கம, பஞ்செட்டியில இருந்து நாள் ஒன்றுக்குக் கிடைக்கின்ற 9 மில்லியன் காலன் தண்ணீரையும சேர்த்து தற்போது 2 நாட்களுக்கு ஒரு முறை 30 மில்லியன காலன தண்ணீர்வழங்குவது இமமாத இறுதி வரை தான நீடிக்கும.

புழலேரியில் நீர்மட்டம சிறிது கூட அதிகரிக்கவில்லை. இனனும 10 நாட்களுக்குள் புழலேரி முற்றிலும வற்றிவிடும்.

ஜூலை முதல்தேதியிலிருந்து தாமரைபாக்கம, பஞ்சட்டி ஆகிய பகுதிகளில் பூமிக்கு அடியிலிருந்து எடுக்கப்படும நீரும, கீழ்ப்பாக்கம, திருவானமியூர் ஆகிய இடங்களிலிருந்து துளைக் கிணறுகளிலிருந்து கிடைக்கும நீரும, புழலேரியிலிருந்து கிடைக்கும சிறிதளவு நீரும சென்னை நகருக்குக் கிடைக்கும.

இந்தக் குறைந்த தண்ணீரைக் கொண்டு 2 நாளுக்கு ஒரு முறை 30 மில்லியன் காலன் நீர் வழங்குவதை தொடர்ந்துமேற்கொள்ளஇயலாது. இமமாத இறுதிக்குள் மழை பெய்யாவிடில் ஜூலை மாதம 2-ம் தேதியிலிருந்து 3 நாட்களுக்கு ஒரு முறை 30 மில்லியன காலன தண்ணீர் வழங்கப்படும.

குடிநீர் பிரச்னையை சமாளிக்க கூடுதல செலவுகளுக்காக தமிழக அரசு மேலும ரூ. 50 லட்சம வழங்கியுள்ளது.

குறிப்பாக பிடித்து வைத்துள்ள தண்ணீரைப் பொது மக்கள் நன்ருகக் காய்ச்சிய பிறகே குடிப்பதற்கு பயன்படுத்த வேண்டும.

இவ்வாறு மாநகராட்சி சிறப்பு அதிகாரி அந்தோணி தெரிவித்துள்ளார்.

### பள்ளி திறப்பு ஒத்திவைப்பு

நகரில கடுமையான தண்ணீர் பஞ்சம நிலவுவதை யொட்டி சென்னை மாநகராட்சியின ஆரமப பள்ளிகள், மற்றும நடு நிலைப்பள்ளிகள் ஆகியவை கோடை விடுமுறைக்குப்பின திறப்பது ஜூலை 14-ந் தேதிக் குத் தள்ளிப்போடப் பட்டுள்ளது.

அரசாங்க உயர் நிலைப் பள்ளிகள் திறக்கப்படும போது மாநகராட்சி உயர்நிலைப்பள்ளிகளும திறக்கப்படும

இவ்வாறு அந்தோணி கூறினார்.

### என். ஜி. ஓ. கூட்டம்

சென்னை, ஜூன 21— பழிவாங்கும நடவடிக்கைகளுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும வகையில எனஜிஓவினர் கண்டன நாள் கூட்டம இன்று மாலை 5 மணிக்கு நடக்கிறது.

சென்னை சேப்பாக்கம பொதுப்பணித்துறை அலுவலகக் கட்டிட காமபவுண்டுக்குள் நடக்கும இந்தக் கூட்டத்தில் வி பி சிந்தன, என. எம மணிவர்மா ராகவானந்தம கூடலிங்கம, சந்திரசேகரன ஆகியோர் கலந்து கொண்டு பேசுவார்கள்.

### 3 மந்திரிகளுடன் என்.ஜி.ஓக்கள் சந்திப்பு

சென்னை, ஜூன 21—தமிழ்நாடு என. ஜி. ஓ. யூனியன பிரதிநிதிகள் நேற்று 3 அமைச்சர்களை சந்தித்து தங்களது குறைகளை எடுத்துக் கூறினர்.

சங்கத் தலைவர் சிவ. இளங்கோ, துணைத் தலைவர் வி. ஆர். கோபாலகிருஷ்ணன் ஆகியோர் அமைச்சர்களைச் சந்தித்துப் பேசினர்.

கல்வி அமைச்சர் நெடுஞ்செழியனைச் சந்தித்து, தொழில நுணுக்கப் பள்ளி ஆசிரியர்கள் ஓய்வு பெறும வயதை 55—லிருந்து 58 ஆக உயர்த்த வேண்டும என்று பிரதிநிதிகள் கேட்டுக் கொண்டனர்.

ஸதல ஸதாபன அமைச்சர் மன்னை நாராயணசாமியைச் சந்தித்து, பஞ்சாயத்துக்களில் பணிபுரியும தொழிற்சாலை ஊழியர்கள் 400 பேர்களை வேலைநீக்கம செய்யக்கூடாது என்று கேட்டுக்கொண்டனர் அவர்கள் வேலை நீக்கம செய்யப்பட மாட்டார்கள் என்று அமைச்சர் மன்னை உறுதியளித்தார்.

கூட்டுறவு அமைச்சர் மாதவனைச் சந்தித்து சிவகங்கையில் என். ஜி. ஓ.க்களுக்கும, போலீஸ் அதிகாரிகளுக்கும இடையே ஏற்பட்டிருக்கும தகராறின விளைவுகளை எடுத்துக் காட்டினர்.

## கருணாநிதிக்கு பஸ் ஊழியர் கிளர்ச்சி குழு வேண்டுகோள்

சென்னை, ஜூன் 21—பஸ் தொழிலாளர் போராட்டத்தில் முதலமைச்சர் கருணாநிதி தலையிட்டு சமரசம் செய்து வைக்குமாறு போராட்டக்குழு வேண்டுகோள் விடுத்துள்ளது.

தமிழ்நாடு பஸ் தொழிலாளர் போராட்டக் குழு கூட்டம சென்னையில நேற்றிரவு டி. ராமமூர்த்தி தலைமையில நடைபெற்றது. போராட்டக்குழு உறுப்பினர்கள் ஏ. எம. கோபு (ஏ ஐ டி யு சி) வி. பி சிந்தன் (சி ஐ டி யூ) என் எம. மணிவர்மா (பழைய காங்கிரஸ் தொழிற் சங்கம) எஸ. ராகவானந்தம் (அ தி மு க தொழிங்சங்கம) ஆகியோர் கலந்து கொண்டனர்.

கூட்ட முடிவில்ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானம பின் வருமாறு:—

பஸதொழிலாளர்போராட்டம தொடங்கிய ஜூன் 15 லிருந்து இன்றுவரை சுமார் 1600 தொழிலாளர்கள்கைது செய்யப்பட்டுள்ளனர் 2000 பேர் சஸபெண்டு செய்யப்பட்டுள்ளனர்சுமார் 1000பேர் ஊர் மாற்றம செய்யப்பட்டுள்ளனர்.

விசுவாச ஊழியர்களை வைத்து எடுக்கப்படும பஸகளுக்கு போலீசும அடியாட்களும அமர்த்தி தண்டச் செலவு செய்வது நிற்கவில்லை. கூட்டம கூடி பேசுவதற்கு விதிக்கப்பட்டுள்ள தடை உத்தரவும நீடிக்கிறது. பேச்சுவார்த்தைக்குதயாராக இருப்பதாக அரசு தரப்பில்

(6-ம் பத்தி பார்க்க)

செங்கற்பட்டு மாவட்டத்தில் சுற்றுப்பிரயாணம் ஆரம்பித்துள்ள காமராஜர் திருமழிசை கிராமத்தில் பேசியபோது எடுத்த படம்.

## "முதலாவது குற்றவாளி எம். ஜி. ஆர். தான்": காமராஜர் புகார்

காஞ்சிபுரம், ஜூன் 21—"தமிழ்நாட்டில் இன்று நடைபெறும் ஊழல் ஆட்சிக்கு வித்திட்ட முதல் குற்றவாளி எம். ஜி. ஆர். ஆவார்" என்று காமராஜர் கூறினார்.

பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜ் செங்கற்பட்டு மாவட்ட சுற்றுப் பயணத்தை நேற்று மேற்கொண்டார்.

ஆவடி, குன்றத்தூர், சுங்குவார்சத்திரம, திருமழிசை ஆகிய 4 ஊர்களில் காமராஜர் பேசினர்.

திருமழிசை பேரூராட்சி மன்றம காமராஜுக்கு வரவேற்பு இதழ் வாசித்தளித்தது.

காமராஜர் போகும்போது ஆங்காங்கே அவருக்கு மக்கள் கூடி நின்று வரவேற்பு அளித்தனர்.

ஆவடி கூட்டத்தில் பேசுகையில் காமராஜர் கூறியதாவது:—

ஜனநாயகம என்ருல் பல கட்சிகள் இருக்கும, ஒவ்வொரு கட்சியும மக்களுக்கு என்ன நன்மை செய்ய இருக்கிறோம் என்பதைத் தான் சொல்ல வேண்டும் ஆனல் அந்தக் காலம் போய்விட்டது

இப்போது அரசியல் கட்சிகள் வன்முறையில் இறங்கியுள்ளன. இது நாட்டுக்கு நல்லதல்ல. வன்முறை இல்லாமலேயே நாம் சுதந்தரம் பெற்ருேம.

இங்கே தி. மு. க. வும் அ. தி. மு. க. வும் அடிக்கடி மோதிக்கொள்கிருர்கள். இதை விடுத்து அவர்கள் மக்கள் ஆதரவைத் தேட முன் வரவேண்டும்.

தி. மு. க. வும், அ. தி. மு. க. வும் தப்பு செய்கிருர்கள்.

### கருணை இல்லம்

கருணாநிதி கருணை இல்லத்தைத் திறந்துவிட்டு ஏழைகளைக் காப்பாற்றி விட்டேன் எனகிருர்.

பிச்சைக்காரர் விடுதியைத் திறந்தேன் என்கிருர்.

காங்கிரஸ் ஆட்சிக்காலத்திலும இப்படிப்பட்ட காரியங்களைச் செய்தது. ஆனல் அப்போது அரசு தலையிடவில்லை.

### அரசு மீது புகார்

இப்படிப்பட்ட திட்டங்கள் நல்லதுதான். ஆனல் இதற்கு எப்படி வசூல் நடைபெறுகிறது? அதிகாரிகள் வசூலில் ஈடுபடுகிருர்கள். அதிகாரிகள் வசூல் செய்யும்போது லஞ்சமும, ஊழலும ஏற்படுகிறது" என்று காமராஜ் பேசினர்.

### முதல் குற்றவாளி

குன்றத்தூரில் பேசும்போது காமராஜ் கூறியதாவது:—

திமுக ஆட்சி ஊழல் ஆட்சி என்று நான் முன்பு சொன்னேன். அப்போது கருணாநிதியைவிட எம். ஜி. ஆருக்கு கோபம் வந்தது.

யாரைப் பார்த்து ஊழல் ஆட்சி என்று உறுகிருய் என்று என்னைப் பார்த்து கேட்டார்.

கொஞ்சநாள் சென்றதும் தி மு க ஊழல் ஆட்சி என்று எம. ஜி. ஆரே கூறினர்.

தி மு க விலிருந்து பிரிந்ததும எம. ஜி. ஆர் தி மு க. ஆட்சி ஏற்பட்டதற்கு நானே காரணம என்ருர். "கருணாநிதியை நானதான முதலமைச்சராக்கினேன" என்று எம. ஜி. ஆர் கூறினர்.

ஆகையால் இனறையஊழல் நிறைந்த ஆட்சியை ஏற்படுத்திய முதல் குற்றவாளி எம். ஜி. ஆர். தான்.

தி. மு. க.வும, அ. தி. மு. க.வும ஒரே குட்டையில் ஊறியமட்டைகள் என்று நான் முன்பு கூறினேன். அதைமக்கள் புரிந்துகொண்டு இந்த கட்சிக்கு வாக்களிக்கக் கூடாது. இனிமேலும தாய்மார்கள் ஏமாறக்கூடாது. என்று காமராஜ் பேசினர்.

### "எம். ஜி. ஆர். ஒரு கோழை"

திருமழிசையில் நடைபெற்ற கூட்டத்தில் பேசுகையில் எம. ஜி. ஆர். ஒரு கோழை என்று காமராஜ் கூறினர்.

அவர் பேசியதாவது:—

இந்திய அரசியலில் இப்போது குழப்பம நிலவுகிறது. இப்படியே போனல் ஒருமைப்பாடு குலைந்துவிடும.

மற்ற மாநில குழப்பத்தைப் பற்றி நாம கேட்டால், உன் மாநில சங்கதி என்ன என்று கேட்பார்கள் ஆகையால் முதலில் நம் மாநிலத்தை சீர்படுத்த வேண்டும். அதற்காக பாடுபடுகிறேன்.

இப்போது அரசியல் தலைவர்களுக்குப் பதவி ஆசை அதிகமாகிவிட்டது. இப்படியே போனல் மக்களுக்கும் அரசியல் கட்சிகள் மீது நம்பிக்கையே போய்விடும.

இப்போதைய கஷ்டங்களுக்கு எல்லாம் ஆட்சியாளரே காரணம். மழை பெய்யவில்லை என்பது

2-பக்கம் பார்க்க

4-ம் பத்தி தொடர்ச்சி

அறிக்கை விடப்படுகிறது.

போராட்டக்குழு எப்போதும போலவே இப்போதும பேச்சுவார்த்தைக்கு தயாராய் இருப்பதை தொடர்ந்து தெளிவுபடுத்தி வந்தோம.

தொழிலாளர் நல அமைச்சரை 17ந்தேதி சந்தித்து நேரிலும இதைக் கூறியுள்ளோம. விரைவில் பேச்சுவார்த்தை நடந்து சமரசம ஏற்படும என்ற நமபிக்கையும தோற்றுவிக்கப்பட்டது. ஆயினும அரசு தரப்பில ஏனோ காலங் கழித்துக் கொண்டுவருகிருர்கள்.

சிறையில தொழிலாளர்கள் தனி வகுப்புக் கைதிகளுக்குக் கூட நடத்தப்படாமல வெறும கிரிமினல குற்றவாளிகளைப் போல நடத்தப்படும கொடுமை இழைக்கப்படுகிறது. மேலும சஸ்பென்ஷன் உத்தரவுகள் வேலை நிறுத்தம செய்துள்ள சிறையில் உள்ள தொழிலாளர்களின் வீட்டு முகவரிக்கு பதிவு அஞ்சல்களில் வந்து குவிந்த வண்ணம உள்ளன.

தொழில் உறவில் சவுஜன்ய நிலைமை உருவாக உதவும வித்தில் உடனே போராட்டக் குழுவுடன பேச்சுவார்த்தை நடத்தி போராட்டத்துக்கு நல்லதோர் முடிவு ஏற்பட முதலமைச்சர் முனவர வேண்டுமாறு வற்புறுத்துகிருேம

முடிவு ஏற்படும வரை வேலை நிறுத்தமும மறியலும தொடர்வது தவிர்க்க முடியாததாகி உள்ளது என்பதையும குழு தெரிவித்துக் கொள்ளுகிறது' என்று போராட்டக் குழுவின் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

### கோவை மாவட்டத்தில்

## அ. தி. மு. க. வினர் 200 பேர் திடீர் கைது

சென்னை, ஜூன் 21— முதலமைச்சர் கருணாநிதி கோவை மாவட்டத்திற்குச் செல்லவிருப்பதை முன்னிட்டு, அந்த மாவட்டத்தில் நேற்றிரவிலும் இன்றும் அண்ணா தி. மு. க. வினர் சுமார் 200 பேர் திடீரென்று கைது செய்யப்பட்டிருக்கிருர்கள் இந்த தகவலை அ. தி மு. க. பிரமுகர் ஒருவர் வெளியிட்டார்.

இந்த மாதம 24, 25 26, ஆகிய தேதிகளில் கருணாநிதி கோவை, மாவட்டத்தில சுற்றுப் பிரயாணம செய்வார் அப்போது அவருக்கு கறுப்புக் கொடி காட்டப்படும என்று அண்ணா தி மு க. அறிவித்துள்ளது.

அதை முன்னிட்டு நேற்றிரவிலிருந்து அந்த மாவட்டத்தில் ஏராளமான அதிமுக பிரமுகர்களும, ஊழியர்களும கைது செய்யப்பட்டு வருகிருர்கள் என்று அதிமுக பிரமுகர் ஒருவர் சென்னையில் கூறினர்

மருதாசலம கே. என, கே. ராமசாமி, சண்முகசுந்தரம, அண்ணா நமபி இளைய நமபி, ஜி.கே. சுப்பிரமணியம ஆகியோர் உள்பட இன்று மத்தியானம வரை சுமார் 200 பேர் கைது செய்யப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

## வெளிநாடுகளுக்கு செல்லும் புதுச்சேரி அனாதைக் குழந்தைகள்

பாண்டிச்சேரி, ஜூன் 21—புதுவையிலுள்ள செயிண்ட் ஜோசப் மருத்துவ நிலையம் கடந்த 2 ஆண்டுகளில் சுமார் 300 அனாதைக் குழந்தைகளை வெளிநாட்டுக்கு அனுப்பியிருக்கிறது.

பிரெஞ்சுநாட்டுக்கும், பெல்ஜியம் நாட்டுக்கும் இந்தக் குழந்தைகள் அனுப்பி வைக்கபபட்டன.

அந்த நரடுகளிலுள்ள குடும்பங்கள் இந்தக் குழந்தைகளை ஏற்றுக்கொண்டு வளர்த்து வருகின்றன.

'இன்னும் ஒரு வாரத்தில் மேலும 5குழந்தைகள்பிரான்சுக்கும' பெல்ஜியத்துக்கும அனுப்பி வைக்கப்படும என்று மருத்துவ நிலைய தலைவி அன்னை ஜார்ஜின தெரிவித்தார்.

புதுவை கவர்னர் சேத்திலால் இந்த நிலையத்துக்கு வந்து இதன் சேவையைப் பாராட்டினர்.

## வானொலி

**ஞாயிறு, ஜூன் 22**

சென்னை-1
(416.7 மீ

காலை
5-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 குயில்தோப்பு நாடகம் (11)
7-00 திங்கள் மலர்
7-05 தமிழ்மணம்
7-35 மெல்லிசை
7-45 திரைப்பாடல்கள்
8-00 டி. சௌடையா — வயலின்
9-15 திரைப்பாடல்கள்
9-30 பள்ளுபபாட்டு
9-45 திரை இசை
10-02 ரமணி — நாதஸ்வரம்
பகல்
12-02 திரை இசை
12-50 மெல்லிசை
1-00 மீண்டும் கேட்போம்
1-30 அவ்வையார் அரங்கம்
2-10 சிறுவர் சோலை
3-00 நியாயங்கள் தோற்பதில்லை — நாடகம்
மாலை
4-00 ஒலிக்கதிர்
4-05 விரும்பிக் கேட்டவை
5-00 நாடக முன்னோட்டம்
5-10 இசைப்பயிற்சி
5-20 வாத்திய விருந்து
5-30 தொழிலாளர்களுக்கு
6-05 திரைப் பாடல்கள்
6-15 செய்தி அரங்கம்
7-00 மக்கள் மேடை
7-25 விவசாயிகளுக்கு
8-00 பாமாலை சூலமங்கலம் சகோதரிகள்
8-30 நகரவாழ்வின் நெருக்கடி — உரையாடல்
8-45 நாத இன்பம்
9-15 சி. சரோஜா, கி லலிதா — பாட்டு
10-30 ஸிதார்
11-00 உலகச் செய்திகள்
11-05 வானிலை — முடிவு

சென்னை - 2
211.3 மீ)

காலை
6-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-15 சான் ராணி — சரோத்
7-30 கலாரங்கம் (மலையாளம்)
9-00 சம்ஸ்கிருதச் செய்தி
9-05 கடிதம் (ஆங்கிலம்)
9-10 ஆட்டவிடுபு (தெலுங்கு)
பகல்
12-40 மேற்கத்திய இசை
1-30 தெலுங்கு நாடகம்
மாலை
4-15 ஸ்போர்ட்ஸ்
5-50 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்
இரவு
8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 மேற்கத்திய இசை
9-00 வாத்திய விருந்து
9-15 ஸ்பாட் லைட்
9-30 நடப்பு நிகழ்ச்சிகள்
10-00 மேற்கத்திய இசை
11-00 முடிவு

திருச்சி
(319. மீ)

காலை
6-00 வந்தேமாதரம்
6-10 நெறிவிளக்கம்
6-15 பாமாலை ராதா ஜெயலக்ஷ்மி டி. ஆர். மகாலிங்கம்
6-30 விவசாயிகளுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 கீர்த்தன அஞ்சலி
7-25 பெட்டகம்
7-35 மீண்டும் கேட்போம்
8-20 அலமேலு அர்ஜுனன் எஸ். புஷ்பா — பாட்டு
9-35 நீங்கள் கேட்டவை
10-00 பெண்ணுலகம்
10-30 ஒலிபரப்பு முடிவு
பகல்
12-02 சூரிய காந்தி
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 மணிமலர்
1-45 புதிய திரை இசை
2-10 விவசாய அரங்கம்
2-30 இசைமாலை
3-00 சென்னை 1 அஞ்சல்
மாலை
4-30 ஏ. கோவிந்தராஜன் — நாதஸ்வரம்
5-30 தொழிலாளர்களுக்கு
6-10 அறிவியல் விந்தைகள்
6-15 சென்னை 1 அஞ்சல்
6-40 கிராம நிகழ்ச்சி
7-25 விவசாயிகளுக்கு
8-00 இளைய பாரதம்
8-30 தபால் பெட்டி
9-15 தாயகஓவியம்-சித்திரம்
9-30 சங்க இலக்கியம் — கருத்தரங்கு
10-00 ஒலிப்பரப்பு முடிவு

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15. ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00. 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி: காலை 8-10, 12-00, 2-00, 6-00, 9-00.

விவிதபாரதி:
பகல் 11-02 'தாய்ப் பாசம்' — ஒலிச்சித்திரம்
மாலை 6-15 மஞ்சரஞ்சிதம்
இரவு 9-15 'வானவில்' குடும்ப தொடர் சித்திரம்

# டெல்லி பேரணிக்கு ரூ. 1 கோடி செலவு: 6 கட்சி குற்றச்சாட்டு

**புதுடெல்லி, ஜூன் 21— டெல்லியில் நேற்று நடைபெற்ற புது காங்கிரஸ் பேரணிக்கு ரூ. 1 கோடிக்குக் குறையாமல் செலவு செய்யப்பட்டிருப்பதாக 6 எதிர்க்கட்சிகள் குற்றஞ்சாட்டின.**

டெல்லியில் ஜனதா முன்னணியைச் சேர்ந்த 4 கட்சிகளின் கூட்டம நேற்று நடந்தது. இந்த 4 கட்சிகள் அல்லாமல் தி. மு. க சார்பில் இரா. செழியனும் மார்க்சிஸடு கட்சி சார்பில் ஜோதிர்மய்பாசுவும கூட்டத்தில் கலந்துகொண்டனர்

கூட்டத்துக்குப் பிறகு, எதிர்க்கட்சிகளின் சார்பில் பழைய காங்கிரஸ தலைவர் எஸஎன் மிஸரா நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

சுப்ரீம கோர்ட்டில் என்ன தீர்ப்பு கூறப்பட்டாலும பதவியை ராஜினுமா செய்வதில்லை என்றமுடிவில் இந்திரா இருக்கிறார் என்று தெளிவாகிறது என்று மிஸ்ரா கூறினர்.

தமமைத்தனிப்பட்ட முறையில் அல்லாது பிரதமர் பதவியை எதிர்க் கட்சியினர் தாக்குகிறார்கள் என்று இந்திரா கூறியதை மிஸ்ரா மறுத்தார்.

பிரதமர் பதவிக்கு உரிய மரியாதையை குலைத்த இந்திராவைத்தான தாங்கள் எதிர்ப்பதாக அவர் தெரிவித்தார்.

### சுதந்திரம் இந்திரா தந்த பரிசல்ல

எதிர்க்கட்சியினருக்கு அதிக சுதந்திரம தரபபட்டிருக்கிறது எனறு இந்திரா கூறியதையும மிஸ்ரா கண்டித்தார

இபபோது அனுபவித்து வரும சுதந்தரம இந்திரா தரும பிச்சையல்ல. அரசியல் சட்டத்திலேயே தரப்பட்டுள்ள உரிமையாகும அது. அதைஇப்போதுஇந்திரா காந்தி கட்டுப்படுத்தி வருகிறார் என்றார் அவர்.

தீவிர திட்டங்களை எதிர்க்கட்சியினர் எடுத்துவருவதாக இந்திரா கூறியதையும்மிஸ்ரா கண்டித்தார்.

ஒருவேளை பாங்கி தேசியமயமாக்கப்பட்டதை இந்திரா சொல்வதாக இருந்தால் அத்திட்டத்தை யார் எதிர்த்தது என்று மிஸ்ரா கேட்டார்.

### பேரணிக்கு ரூ. 1 கோடிசெலவு

நேற்று நடைபெற்ற புது காங்கிரஸ் பேரணி அதிகாரத்தை விளமபரப்படுத்துவதும், ஊழலை நிருபிப்பதும், ஆகும என்று மிஸ்ரா கூறினர்.

கூட்டத்தைக் காண்பிக்க அரசாங்க அதிகாரிகளும, விளமபர இலாகாவும பயன்படுத்தப்பட்டதாக அவர் குற்றம சாட்டினர்.

இந்தப்பேரணிக்கு ரூ. 1 கோடிக்கு குறையாமல் செலவு செய்யப்பட்டதாக கேள்விப்பட்டேன் என்றார் அவர்.

### மொரார்ஜி கருத்து

பிரதம மந்திரி இந்திரா காந்திலோகசபைக்குத் தேர்ந்தெடுக்கப் படடது செல்லாது என்று அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பு வழங்கியிருப்பதால் பதவியிலிருந்து விலகுவது தவிர இந்திராகாந்திக்கு வேறு வழியில்லை என்று பழைய காங்கிரஸ் தலைவர் மொரார்ஜிதேசாய் ஆமதாபாத்தில் கூறினர்.

அலகாபாத் கோர்ட்டின் விளைவை தெருச்சந்திக்குக் கொண்டு வருவதின் மூலம பிரதம மந்திரி இந்திரா காந்தி நெருப்புடன் விளையாடுகிறார் என்று ஆசாரிய கிருபளானி பமபாயில ஒரு கூட்டத்தில பேசுகையில எச்சரித்தார்.

# செங்கற்பட்டில் தடை உத்தரவு

செங்கற்பட்டு, ஜூன் 21— செங்கற்பட்டில் போலீசார் அனுமதியின்றி பொதுக்கூட்டங்கள் நடத்தக்கூடாது எனறு போலீசார் தடை உத்தரவு பிறப்பித்திருந்தனர். 20-ந் தேதிவரை விதிக்கப்பட்டிருந்த இந்தத் தடை உத்தரவு இப்போது இந்த மாத இறுதிவரையில் நீடிககப்பட்டுள்ளது.

# சிறுவன் மரணம்

பாண்டிச்சேரி, ஜூன் 21— புதுவையை அடுத்த கோரிமேட்டைச் சார்ந்த ராஜாஜி நகர் என்னுமிடத்தில் வசித்து வரும் சுந்தரம் என்பவரின் மகன் கிருஷ்ணன், வயது 13. இச்சிறுவன் தோப்பில் விளையாடிக் கொண்டிருக்கும் போது, குவளக்கொட்டை ஒன்றைத் தெரியாத்தனமாக தின்றுவிட்டானும்: உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்படும் வழியிலேயே மரணமடைந்தான்.

கோரிமேடு காவல்நிலைய ஏட் தாவீதும், சப்இன்ஸபெக்டர் ராமலிங்கமும் பிரேத விசாரணை செய்தனர்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூன் 21—

**தங்கம்**
(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 547 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 51 75

**வெள்ளி**
பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1155 00
உள்ளூர் 1100 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 65

**மணிலாப்பயறு**
கோடைகால பட்டாணி
மொத்த விலை 275 00

**மணிலா எண்ணெய்**
மொத்த விலை ரூ. 740 00
சில்லரை விலை ரூ. 8 00

**விளக்கெண்ணெய்**
(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை ரூ. 430 00
சேலம் தாமரை அன்னம் மார்க் 16 05 கி. கி.) ரூ. 74 00

**தேங்காய் எண்ணெய்**
(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 150 00

**நல்லெண்ணெய்**
17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 145 00
முதல் ரூ. 147 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலா 1-க்கு ரூ. 9 50

**கடலைப்பிண்ணுக்கு**
70கி.கி.கொண்டமூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 77 00

**சர்க்கரை**
பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 450 00
முதல் ரூ. 453 00

### திருமணம்

ஓமலூர், ஜூன் 21—ஓமலூர் நவமணி ஏஜெண்டு டி. கன்னையன் அவர்கள் செல்வி கலாவதிக்கும், பூகாரிபட்டி டாக்டர் குள்ளையார் அவர்கள் செல்வன் கோவிந்தராசனுக்கும் (எலக்டிரிகல் காண்ட்ராக்டர்) ஓமலூரில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.

புது காங்கிரசுக்கு குஜராத் முதல்வர் கோரிக்கை:

# "இந்திராவின் தேர்தல் பிரச்சார செலவை கொடுக்க வேண்டும்"

**ஆமதாபாத். ஜூன் 21—பிரதமர் இந்திரா தேர்தல் பிரச்சாரம் செய்வதற்காக வந்தபோது ஏற்பட்ட செலவுகளை புது காங்கிரஸ் கொடுக்க வேண்டும் என்று குஜராத் முதலமைச்சர் பாபுபாய் பட்டேல் கூறினர்.**

ஒரு பொதுக் கூட்டத்தில் கலந்துகொண்டு குஜராத்தில் பேசும்போது தெரிவித்ததாவது:

"புதுகாங்கிரஸ் கட்சி இந்த தேர்தலுக்காகப் பெருந்தொகையைச் செலவிட்டிருக்கிறது. தேர்தலில் வெற்றிபெறுவதற்காக அரசு இயந்திரத்தையும் துஷ்பிரயோகம் செய்துள்ளது. நீங்கள் என்னதான் செய்தாலும் நாங்கள் ஜனதா அணியைத்தான் ஆதரிக்கிறோம் என்று மக்கள் அவர்களுக்கு பதிலளித்துவிட்டார்கள்.

குஜராத்தில் தேர்தல் பிரச்சாரம் செய்வதற்காகபிரதமர் இந்திரா வந்தபோது அதற்காக ஏற்பாடுகளைச் செய்வதற்கு ஆன செலவுகளுக்கானதொகையை புது காங்கிரஸ் கொடுக்க வேண்டும்.

அப்படிக் கொடுக்கா விட்டால அந்தக் கட்சி கடன் பொறுப்புகளைத் தீர்க்க முடியாத ஓட்டாண்டி என்று அறிவிக்கப்படும்."

இவ்வாறு குஜராத் முதல்வர் பாபுபாய் பட்டேல் கூறினர்.

ப. உ. ச. விவகாரம்

# அதிகாரி ராம்சந்தர் மூன்ரும் நாள் குறுக்கு விசாரணை

**சென்னை, ஜூன் 21—ப. உ. ச, விவகாரம் சம்பந்தமாக நேற்று விசாரணைக் கமிஷன் முன்னிலையில் அதிகாரி ராம்சந்தர் மூன்ரும் நாளாக குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.**

அரிசிபேர ஊழல் புகார் பற்றி விசாரணை நடத்தும் நீதிபதி ராமபிரசாத் ராவ் முன்பு உணவு இலாகா காரியதரிசியாக இருந்த ராம்சந்தர் நேற்று மேலும் சாட்சியமளிக்கையில் தஞ்சாவூர் கூட்டுறவு மார்க்கெட்டிங் சம்மேளனம் ஒரு நிறுவனம் என்பதால் அதற்கு அப்போது உதவ அரசு முயன்றது என்றும், சம்மேளனத்துடன்தொடர்பு கொண்டிருந்த தனி நபர்களுக்கு உதவ அரசு ஒரு போதும முயற்சிக்கவில்லை என்றும கூறினர்.

கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. எஸ். அழகிரிசாமி சார்பில் ஆஜராகும் வக்கீல் என். டி. வானமாமலை 3-வது நாளாக குறுக்கு விசாரணை செய்த போது, சம்மேளன இருப்புக்கு சொந்தக்காரர் என்ற முறையில் அதன் தலைவராக இருந்த வி. எஸ். தியாகராஜ முதலியாருடன் 'டெண்டர்' குறித்து ஒவ்வொரு கட்டத்திலும் தாம் கலந்தாலோசித்ததாகராம்சந்தர் கூறினர். சம்மேளனத்திற்கும் தாண்டவராயனுக்குமிடையே நடந்த பேரம சம்பநதமாக சம்மேளனத்தைச் சேர்ந்த வேறு எவருடனும தாம் கலந்தாலோசிக்கவில்லை என்றும் சம்மேளனத் தலைவர் சொல்படிநடக்க வேண்டாம் என்று தன்னிடம் யாரும் கூறவில்லை என்றும் ராம்சந்தர் சொன்னர்,

வக்கீல்: முதல் டெண்டருக்கு முன பிருந்த 'நிலைமைக்கு' சம்மேளனத்தின் தவருன கொள்கை காரணம என்று யாரேனும தங்களை எச்சரித்தார்களா?

ராமசந்தர்: சம்மேளன நலனைக்கருதி முடிவு எடுக்கும படி கூட்டுறவு காரியதரிசி 1971 பிப்ரவரி 23ந் தேதி சிவில் சப்ளை கமிஷனருக்கு கடிதம எழுதியிருக்கிறர்.

40,000 டன்களை கொள் முதல் செய்ய சம்மேளனத்திற்கு அரசு ரூ. 56 லட்சம கடனுதவியதுடன், சம்மேளனத்திற்கு வழங்குமகடனுதவி குறித்து ஸ்டேட் பாங்கிற்கு ரூ. 3.5 கோடிக்கு உத்தரவாதம அளித்தது உணவு கார்ப்பரேஷனுக்கும் அரசு அதுபோன்று ரூ. 2.8 கோடி கடன் வழங்கியுள்ளது உணவு கார்ப்பரேஷன இத்தொகையைதிருப்பிக்கொடுப்பது பற்றி சந்தேகம் எதுவும் இல்லை அனுமதிக்கப்பட்ட 5000டன் அரிசியை வெளியே விற்று சம்மேளனம் அடக்க விலையை அநேகமாக பெற்றிருககலாம்.

### 2-வது டெண்டர்

2-வது டெண்டர் சமயத்தில் தாண்டவராயன் புதிதாக டெபாசிட் செய்தாரா? முதல் டெண்டரின்போது செலுத்திய டெபாசிட் திருப்பிக்கொடுக்கப்பட்டதா என்று வக்கீல் கேட்டதற்கு, அவரது டெபாசிட்டை திருப்பிக் கொடுக்கும்படி உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருந்தது என்றும், அநதத் தொகையை 2-வது டெண்டருக்கு டெபாசிட்டாக வைத்திருக்கும்படி அவர் கேட்டுக் கொண்டார் என்றும். எனவே முதல் டெபாசிட் திருப்பிக் கொடுக்கப்படவில்லை என்றும் ராமசந்தர் கூறினர்.

தாண்டவராயன் தவிர வேறு யாருடனும் 'டெண்டர்' பற்றிதான் சந்தித்துப் பேசவில்லை என்றும், தாண்டவராயன் எதிர்பார்த்த அளவு விலை கொடுக்க முன் வந்தார் என்றும அவர் கூறினர்.

தாண்டவராயன் ஒரு விலை கொடுக்க முன் வந்தார் என்பதை தவிர பேரம் பேசி விற்பனை நடத்துவதில் எந்த கொள்கையும் பின்பற்றப்படவில்லை இல்லையா என்று வக்கீல் கேள்வி கேட்டதற்கு ஆரம்ப டெண்டர் சமர்ப்பித்தவர்கள் மேற்கொண்டு தாங்கள் எவ்வளவு விலை அளிக்கலாம் என்று கூற குறிப்பிட்ட அளவு டெண்டர் வாய்ப்பளிக்கிறது என்றும், எனவே பிறகு எவரேனும தாங்களாகவே வந்திருநதால் அவர்களின்விலை பற்றியும பரிசீலித்திருப்பேன் என்றும அவர்களைத் தேடி தான் போகவில்லை என்றும அவர் கூறினர்.

"1969ம வருடத்திய இருப்பை மத்திய பொது இருப்புக்கு கொடுக்க முன் வந்தோம். மத்திய அரசு அதை நிராகரித்து விட்டது. அதற்கு காரணம அதன் தரம மட்டமாக இருந்தது எனபது அல்ல. விலை விஷயத்தில் உடனபாடு ஏற்படாதது தான காரணம" என்று பிற்பகலில் வான மாமலையின கேள்விகளுக்கு பதிலளிக்கையில் ராம்சந்தர் கூறினர்.

மத்திய பொது இருப்புக்கு அதைக் கொடுக்க முன் வந்தது வெறும போலியான செயல் என்று வக்கீல் கூறியதை சாட்சி மறுத்தார்.

தஞ்சாவூர் கூட்டுறவு மார்க்கெட்டிங் சமமேளனத்தின் பேரம் சமபந்தப்பட்ட பைல் முடிவு எடுக்கப்பட்டதற்கு முன்பாக கூட்டுறவு மந்திரியிடம செல்லாமல் இருக்குமாறு சாட்சியம (ராமசந்தரும) அப்போதைய உணவு மந்திரியும செய்தார்கள என்று கூறப்பட்டதையும சாட்சி மறுத்தார்.

தஞ்சாவூர் கூட்டுறவுமார்க்கெட்டிங்சமமேளனத்தின்விவகாரங்கள் பற்றி கூட்டுறவு மந்திரிக்கு தெரியும என்பதால் கூட்டுறவு மந்திரியின் பார்வைக்கு அந்த பைல் வைக்கப்படவில்லை என்றுகூறுவது சரியல்ல என்று அவர் சொன்னார்.

### 'உத்தரவு இல்லை'

நிலவரம பற்றி முதலமைச்சர் தெரிந்துகொள்வதற்காக பைல் அவருக்கு அனுப்பப்பட்டது என்றும, கூட்டுறவு மந்திரிக்கு பைலை அனுப்பக் கூடாது என்று தமக்கு உத்தரவு எதுவும தரப்படவில்லை என்றும அவர் கூறினர்.

கொள்கையில் முக்கிய மாறுதல் சம்பந்தப்பட்ட பிரேரணைகள் விதிகளின்படி மந்திரிசபை முன்பாக வரும் என்றும அவர் சொன்னர்.

அப்போதைய உணவு மந்திரியின் தூண்டுதலின் பேரில் மந்திரிசபை பரிசீலனைவேண்டுமென்றே தவிர்க்கப்பட்டதா என்று வக்கீல் கேட்டார்,

இந்த விவகாரத்தில் கொள்கைப் பிரச்னை எதுவும் சம்பந்தப்பட்டிருக்கவில்லை என்று ராம்சந்தர் பதிலளித்தார்.

ஜமபுலிங்க முதலியார் அப்போதைய உணவு மந்திரிக்குத் தெரிந்தவர், அவரது நண்பர் என்பதும், ராஜமாணிக்க முதலியார் அப்போதைய உணவுமந்திரிக்குத் தெரிந்தவர் மட்டுமின்றி மந்திரியின மாப்பிள்ளையுடன் வியாபாரத்தில் தொடர்பு கொண்டிருந்தவர் என்பதும தமக்கு (ராமசந்தருக்கு) தெரியும என்று கூறப்பட்டதை ராமசந்தர் மறுத்தார்.

அதிமுக உறுப்பினர் ஆர். கண்ணன் சார்பில் ஆஜரான வக்கீல் எஸ். கண்ணன் ராமசந்தரை குறுக்கு விசாரணை செய்யஆரம்பித்தார். திங்கட்கிழமையன்று விசாரணை தொடர்ந்து நடக்கும.

## காமராஜர் பேச்சு

1-ம் பக்கத் தொடர்ச்சி

உண்மைதான். ஆனல் இதை முன்பே உணர்ந்துதண்ணீரை சேமித்து வைத்திருக்க வேண்டாமா? விவசாயிகள் கூட தானியத்தை சேமித்து வைப்பார்களே? ஆனல் இப்போது அதற்கும வழியில்லை. லெவி எனறு எடுத்துச்சென்று விடுகிறார்கள். விவசாயிகளையும வாழ விடாமல் செய்கிறார்கள்.

காங்கிரஸ் ஆட்சி காலத்தில் அரசாங்க வருமானம ரூ 180 கோடி. இன்று ரூ. 500 கோடிவரியைக் குறைத்து வசதியைப் பெருக்குவோம் என்றார்கள். இன்று அவர்கள் தங்களது வசதியைப் பெருக்கிக் கொண்டார்கள்.

இங்கே செம்பரம்பாக்கம் ஏரி ரூ. 75 லட்சத்தில் தூர் வாரப்பட்டதாம். ஆனல் அங்கு வேலை நடப்பதை யாரும் பார்க்கவில்லை. அவை ஏப்பம்விட்டு விட்டார்களோ என்னமோ? இப்படிப்பட்டவர்களை நீங்கள் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள்.

கருணாநிதிக்கு கருப்புக் கொடி காட்டப்போவதாக அறிவித்து பூனை போல் எம ஜி ஆர். பெங்களூர் சென்ரூர். போராட்டத்துக்கு இவர் தலைமை வகித்திருக்க வேண்டாமா? எம ஜி. ஆர். ஒரு கோழை. இப்படிப்பட்ட ஒரு கோழையை நான பார்த்ததில்லை.

இப்படிப்பட்டவர் ராணுவத்தைச் சந்திப்பேன என்ரூர். இவருக்கு ராணுவத்தைப் பற்றி எதுவும தெரியாது. சினிமாவில்தான பார்த்திருக்கிறர். நமம ஊர் போலீசை சந்திக்கவே பயப்படும கோழை எம். ஜி. ஆர்.

### நானும் சினிமா எடுக்கட்டுமா?

சினிமாவில்தான் இவர் வீரத்தைக் காட்டுவார். மக்கள் ஏமாறுகிறார்கள். அப்படியானல் நானும சினிமா எடுக்கட்டுமா?

ரூபாய்க்கு 5 படி அரிசி, எல்லோருக்கும வீடு என்று சினிமாவில் காட்டுகிறேன். இதெல்லாம கனவு காண்பது போல். இவைகளை தெரிந்தும நீங்கள் ஏமாறுகிறீர்களா? இல்லை முட்டாள்கள், இளிச்சன்வாயர்கள் என்று காட்டிக் கொள்கிறீர்களா?

ஆகையால் நல்ல ஆட்சி ஒழிய உங்களது வாக்குகளை நல்ல முறையில் பயன் படுத்துங்கள்.

மேற்கண்டவாறு காமராஜ் கூறினர்.

இந்த 4 கூட்டங்களிலும தேர்தல் நிதியாக காமராஜரிடம ரூ. 27 ஆயிரத்து 500 அளிக்கப்பட்டது.

# போராட்டம் நடத்த வேண்டுமா? ஜெ. பி. அமைத்த கமிட்டி கேள்வி

மதுரை, ஜூன் 21—தமிழ் நாட்டில் சர்வோதயத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயண் நியமித்த 'முழுப்புரட்சி செயல் கமிட்டி' தமிழ்நாடு அரசிடம் ஒரு மகஜர் சமர்ப்பிக்க முடிவு செய்துள்ளது. இந்த மகஜரில் என்னென்ன கோரிக்கைகள் இருக்கலாம் என்பது பற்றி பொதுமக்கள் கருத்தை அறிவதற்காக, ஒரு வினுத்தாளை இந்தக் கமிட்டி தயாரித்துள்ளது.

இந்த வினுத்தாளில் உள்ள கேள்விகளுக்கு பொதுமக்களிடமிருந்து கருத்துக்கள் வரவேற்கப்படும். இந்தக் கருத்துக்களின் அடிப்படையில், ஒரு மகஜர் தயாரிக்கப்பட்டு தமிழ்நாட்டு அரசிடம் சமர்ப்பிக்கப்படும்.

தமிழ் நாட்டில் ஏற்கெனவே அமுலில் உள்ள நிலச்சீர் திருத்த சட்டங்களை முறையாக அமலாக்குவதற்கு அரசும், பொது மக்களும் என்ன செய்ய வேண்டும்? மடங்கள், ஆலயங்கள் ஆகியவற்றின் கீழுள்ள நிலங்களை, இந்த நிலச் சீர்திருத்தச் சட்டங்களின் வரமபின் கீழ் கொண்டு வருவது பற்றி என்ன செய்யலாம்? இப்போதுள்ள லெவிமுறை பற்றிய கருத்து என்ன?

அத்தியாவசியப் பண்டங்களை கூட்டுறவு கடைகள் மூலமாக நியாய விலையில் விநியோகிக்க என்ன நடவடிக்கைகள் எடுக்கலாம்? விலைவாசியைக் கட்டுப்படுத்த அரசும் மக்களும் என்ன செய்யவேண்டும்?

வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்கு அரசு எத்தகைய தொழில் கொள்கையைப் பின்பற்றலாம்? படித்தும வேலையில்லாமல் உள்ள நிலையை மாற்ற கல்வித்துறையில் என்ன சீர் திருத்தங்களைச் செய்யலாம்? மக்கள் தொகையில் பெரும் பாலானோர் பொது வாழ்வில் பங்கு கொள்வதற்கு ஏற்ற திட்டம் என்ன? ஊழல், எதேச்சாதிகாரம் ஆகியவற்றை ஒழிக்க, அரசும் மக்களும் உடனடியாக என்ன நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்? தமிழ் நாட்டில் மக்கள் வாழ்வை முன்னேறச் செய்ய கிளர்ச்சி நடத்த வேண்டுமெனில், எத்தகைய கிளர்ச்சி நடத்தலாம்?

இதுபோன்று பல விஷயங்கள்பற்றி இந்த வினுத்தாளில் கேள்விகள் உள்ளன.

இத்தகவலைத் தமிழ்நாடு "முழுப்புரட்சி செயல் கமிட்டி" தலைவர் கே. அருணசலம் மதுரையில் நிருபர்களிடம் தெரிவித்தார்.

# ரேஷன்கார்டு வாங்காத குடும்பங்களுக்கு புதிய ஏற்பாடு

**சென்னை, ஜூன் 21—ரேஷன் கார்டு வாங்க டோக்கன் கொடுத்து அவைகளைத் தொலைத்துவிட்டவர்கள் உடனடியாக ரேஷன் கார்டு விநியோக அலுவலகத்துக்கு விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.**

சென்னை நகரில் 22ந்தேதி ஞாயிறுக்குள் ரேஷன்கார்டுகள் விநியோக வேலை அநேகமாக முடிக்கப்பட்டு விடும் என்று ரேஷன் கார்டு விநியோக அதிகாரி கூறினர்.

இதுபற்றி அவர் மேலும் குறிப்பிட்டதாவது:—

ரேஷன கார்டுகள் விநியோகம் 99.9 சதவீதம் பூர்த்தியாகிவிட்டது. பெரும் பான்மையான குடும்பங்கள் ரேஷன் கார்டுகளை, பெற்றிருக்கிறார்கள்.

### புதிய ஏற்பாடுகள்

இதற்காக அதிக அளவில் விநியோக அதிகாரிகள் நியமிக்கப்பட்டு அவர்கள் அந்தப் பணியை தீவிரமாகச் செய்து வருகிறார்கள். கடந்த ரேஷன் காலத்தில் கார்டு வேண்டாம் என்ற பங்களாவாசிகள் இப்போது கார்டு வேண்டும் என்று கேட்கிறார்கள். இதன் காரணமாக ரேஷன் கார்டுகள்விநியோகவேலைஇரட்டிப்பாகிவிட்டது கார்டு வாங்க டோக்கன் கொடுக்கப்பட்டு அவை தொலைககப்பட்டதால் கார்டுகள் வாங்கமுடியாதவர்கள் 'இயக்குனர்' ரேஷன் கார்டு விநியோகம் சென்னை-5 என்ற முகவரிக்கு மனு அனுப்பவேண்டும்.

மனுவில் கார்டு வேண்டுவோர் கார்டு கொடுத்த பிறகு தொலைந்த பழைய டோக்கன் கிடைத்துவிட்டால் அதை கேன்சல் செய்ய வேண்டும் என்று கேட்டு எழுதவேண்டும்.

### அதிகாரிகள் தீவிரம்

நிறைய குடும்பங்களில் அப்பாவுக்கும் பிள்ளைக்கும் ஆளுக்கு ஒரு கார்டு வைத்திருக்கிறார்கள். அது சரி இல்லை என்ற காரணம் கண்டு பிடிக்கப்பட்டு அந்த இரண்டையும் ஒரே கார்டாக மாற்றி புதுப்பித்து கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வதில் சிறிது காலதாமதம் ஏற்பட்டிருக்கிறது.

வரும ஞாயிற்றுக்கிழமைக்குள் ரேஷன கார்டுகள் விநியோகத்தை முடித்து விட வேண்டும் என்று அதிகாரிகள் தீவிரமாக இருக்கிறார்கள்.



# வார ராசி பலன்

**ஜோதிடர் திலகம் கம்பிக்குடி சந்திர போஸ்**
'நவமணி' ஜோதிடர்
(21—6—1975 முதல் 27—6—1975 முடிய)

## மேஷம்

(அசுவினி, பரணி, கிருத்திகை 1ம் பாதம்)

ராசி நாதன் 22ந் தேதி முதல் மேஷ ராசியில் பலம் பெறுவதால், இதுவரை ஏற்பட்ட இடைஞ்சல்கள் சூரியனைக் கண்ட பனிபோல் மறையும். தனஸ்தானத்தில் புதன வக்கிரம் நீங்கி சுக்கிரன் பலம் பெறுவதால் பணவசதி நன்றாக இருக்கும். கேட்ட இடத்திலிருந்து பணம் வரும். தொழில்துறையில், இதுவரை ஏற்பட்ட மந்த நிலை மறைந்து, புதிய உற்சாகம் உண்டாகும். உத்தியோகத்தில் சுக்கிரன் பார்வையால் உழைப்பு அதிகரித்தாலும், பாதிப்பு இருக்காது. வியாபாரம் அபிவிருத்தியுடனும். மனச் சந்தோசப்படும் ரீதியிலும் நடைபெறும், குடும்பத்தில் ஒற்றுமை அதிகரிக்குல் காரணமற்ற மனப்பீதி தொடர்ந்து இருக்கும். உறவினருடன் சூர்ய, சனி சேர்க்கையால் பகைமை தோன்றி மறையும் வெளியூர் பிரயாண முயற்சிகள் தாமதித்து சித்திபெறும் வழக்கில் மந்தநிலை மறைந்து வெற்றி வாய்ப்பு அதிகரிக்கும் நன்மைதரும் நல்ல வாரமாகும்.

## ரிஷபம்

(கிருத்திகை 2,3,4 ரோஹிணி, மிருகசிரிஷம், 1, 2-ம் பாதம்.)

ராசியில் இந்த வாரம புதன் உன்னதமான பலம பெற்று சிறப்படைவதால், எதிர் பார்க்கும காரியங்கள் இனி விரைவில் அபிவிருத்தி யடையும. கிடைக்கும செய்திகள் ஊக்கம் தருபவைகளாகவே இருக்கும. தன ஸ்தானத்தில் சூரியன், சனி சேர்க்கை கட்டுப்படுத்த முடியாத செலவினங்களால் கடன் வாங்க வேண்டிய அவசியத்தை கொண்டுவரும. பணத் தட்டுப்பாடு இருந்துகொண்டே இருக்கும். தொழில்துறையில் புதியமுயற்சிகளில்வெற்றியும் அரசாங்க மூலமாக தாமதித்த உதவிகளும் உண்டு. வியாபாரம் நல்லபடியாகவும் லாபகரமாகவும் நடைபெறும் உத்தியோகத்தில் உழைப்பு அதிகரிக்கும். மேலிடத்திலிருந்து எதிர்ப்புகளை சமாளிப்பீர்கள். கணவர் மனைவி குடும்ப உறவு ஒற்றுமை மிகுந்து இருக்கும். உறவினர்களால், உதவியும், நண்பர்களால் முக்கிய காரியங்களில் குருபலத்தில் நன்மையும் உண்டாகும். வெளியூர் பிரயாணம், மகிழ்ச்சிகரமாகவும் நன்மையாகவும் முடியும். வழக்கு ராகு, சனி சாரம் மாறும வரை தாமதிக்கும். உடல்நலம் பாதிக்காது. நல்ல வாரமாகும்.

## மிதுனம்

(மிருகசிரிஷம் 3,4-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3ம் பாதம்)

சூரியனும், சனியும் ராசியில் பலம் பெற உங்களுக்கு புதிய எதிர்ப்புகள் தோன்றும், வேண்டியவர்களே பகையாவார்கள் என்ற ரீதியில் கிரக நிலை இருப்பதால் எதிலும் நிதானம் அவசியம். தனஸ்தானத்தில் சுக்கிரன் பலம் பெற்று புதன் சாரம் அமைவதால், பணம் வருவதுபோல் போவதும் தெரியாது. வர வேண்டிய பணம் பிறர் குறுக்கீட்டால் தாமதித்து வரும். தொழில் துறையில் செவ்வாய் 22ந் தேதி ராசிமாறிய பின் அபிவிருத்தி காட்டும். வியாபாரத்தில் முதலீடுகள் அதிகரிக்கும். உத்தியோகத்தில், திருப்தியற்ற போக்கு இருக்கும். குடும்பத்தில் சிறு பூசல்கள் தலைதூக்கி மறையும், உறவினருடன் வீண் கருத்துவேறுபாடுகளும், செலவுகளும் அதிகரிக்கும். வெளியூர் பிரயாணம், சூரியசனி சம்பந்தத்தால் எதிர்பார்த்த வெற்றியைக் கொண்டுவராது. நண்பருடன், செவ்வாயின் போக்கு சமூக உறவை பாதிக்கும் நிலையில் இருக்கிறது. உடல் நலம் லேசாக பாதித்து சிறு வைத்தியச் செலவுகளுக்குப் பின் குணம் பெறும்.

## கடகம்

(புனர்பூசம் 4-ம் பாதம் பூசம் ஆயில்யம்)

ராசியில் சுக்கிரன் சிறப்பாக சிங்கார நடை போடுவதால், மனமகிழ்ச்சி தரும் வாரமாகும். எதிர்பார்க்கும் முயற்சிகளில் நல்ல செய்திவரும். பணம் தாமதித்தாயினும் கைக்கு கிடைக்காமல் போகாது. தொழில்துறையில் எதிர்பாராத சிலவினங்களைக் கொடுக்குமாயின் குருலக்கினத்தை மிகப்பலமாக பார்ப்பதால் சமாளித்து விடுவீர்கள். உத்தியோகத்தில் செவ்வாயின் நிலை உழைப்பு மிகுந்த வாரமாக அமைக்கும். வியாபாரம் நல்லபடியாக நடை பெறுவதுடன் முதலீடுகள் கூடும். குடும்பத்தில், ஒற்றுமை லேசாக பாதித்து உடன மறையும். புதிய உறவினர் வருகையால் செலவினங்கள் அதிகரிக்கும. நண்பர்களால் உதவியும், ஒத்துழைப்பும உண்டு. வெளியூர் பிரயாண முயற்சிகளில், விரைவில் வெற்றி உண்டாகும, வழக்கின் போக்கு இதுவரை இருந்த தடைகள் மறைந்து துரிதமாக முன்னேற்றம பெருவதைக் காணலாம. உடல் நலம், சுக்கிரன் பலமாக ராசியில் இருப்பதால், லேசாக பாதித்து குணமுண்டாகும. நன்மை தரும நல்ல வாரமாகும.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1-ம் பாதம்.)

சூரியன். லாபத்தில் சனியுடன் பலம் பெற்று அமைவதால், 22ந்தேதிக்கு மேல், வேலை தேடுவோருக்குவெற்றி வாய்ப்பு ஏற்படும். முக்கிய செய்திகள் ஊக்கம் தருவதாகவே அமையும். பண விஷயங்களில் புதன் பலத்தால் வருமானம் பாதிக்காது. எதிர் பார்த்த இடத்திலிருந்து பணம் வரும். தொழில் துறையில் அபிவிருத்தி நிதானமாக இருக்கும். சிலருக்கு தொழில் அபிவிருத்திக்காக கடன் வாங்கவேண்டிய அவசியம்உண்டாகும். உத்தியோகத்தில் நன்மைதரும் செய்திகள் வரும். வியாபாரம் சனி, சூரியன் லாபத்தில் பல பெறுவதால் லாபம் குறையாது. குடும்பத்தில கணவர் மனைவிக்குள் சிறு கருத்து வேற்றுமைகளைத் தோற்றுவித்து மனக்கசப்பைத் தோற்றுவிக்கும். செவ்வாய் மூன்றுமிடப்பார்வையால்வேண்டியவர்கள். எதிரிகளாக வேலை செய்வார்கள். நண்பர்களுடன் உறவு நிலை நல்லபடியமையாது. வெளியூர் பிரயாண முயற்சிகள் நன்மையில் முடியும் வழக்கின்போக்கு படிப்படியாக அபிவிருத்தியைக் கொண்டு வரும். உடல் நலம் லேசாக பாதித்து விலகும்.

## கன்னி

(உத்திரம் 2, 3, 4 அஸ்தம் சித்திரை 1, 2-ம் பாதம்)

ராசிநாதன் புதன் 22ந் தேதி முதல் வக்கிர நிவர்த்தி பெற்ற லாபாதிபதி சாரம் பெற்றதாலும், உங்கள் கௌரவம் உயரும். எண்ணியது எண்ணியபடி நடக்கும். முக்கிய எழுத்துவகை காரியங்கள் அனுகூலமாகமுடியும். பணத்தட்டுப்பாடு மறைந்து லாபம் வரும். தொழில் துறையில் உழைப்பு அதிகரிக்கும் வியாபாரத்தில் குருபலத்தில் மிகவும் நல்ல லாபத்தை எதிர்பார்க்கலாம் பிறர் உதவி உண்டாகும். வேண்டியவர் சம்பந்தமான சுபகாரியங்களில் பங்கு பெறுவீர்கள், உத்தியோகத்தில் சூரிய, சனி சேர்க்கையால், வேலைப்பளு சில தினங்களுக்கு அதிகரிக்கும். குடும்பத்தில் கணவர் மனைவி ஒற்றுமை பாதிக்காது. சிலர் புது வியாபாரத்தில் ஈடுபடக்கூடும், உறவினர்களுடன் சுமுக உறவு நிலை எதிர்பார்க்க முடியாது. நண்பர்களால் உதவியும் ஒத்தாசையும் உண்டாகும். வெளியூர் பிரயாண முயற்சிகள் செவ்வாய் எட்டில் இருப்பதால் எதிர் பார்த்தபடி வெற்றி கிட்டாது. வழக்கின் போக்கு ஆதரவாகவே இருக்கும் நன்மை தரும் நல்ல வாரமாகும்.

## துலாம்

(சித்திரை 3,4-ம் பாதம் சுவாதி, விசாகம் 1, 2, 3-ம் பாதம்)

சுக்கிரன் தசமகேந்திரத்தில் சிறப்பாக பலம பெற்றதால் வேலைவாய்ப்பு தேடிவரும். பிறர் உதவியினுல் ஆகவேண்டிய காரியங்கள் அநுகூலமாக அமையும காரணமற்ற மன வெறுப்பும் கோபமும செவ்வாய் பார்வையால் அடிக்கடி தலைதூக்கும். பணத் தட்டுப்பாடு மறைந்து கையில் பணம வரும. தொழில் துறையில் குரு பலத்தால் அபிவிருத்தி குறையாது. வியாபாரம்செவ்வாய் ஏழில் இருப்பதால் அதிக உழைப்புடன் கூடியதாக அமையும், உத்தியோகத்தில் சுக்கிரன் பலத்தால் மனமகிழ்ச்சி தரும் செய்திகளும் சக ஊழியர்களுடன் சுமுக உறவும் ஏற்படும். கணவர் மனைவிக்குள் உடல்நலம் பாதிப்பினல் மனவருத்தங்களை லேசாக காட்டி மறையும். நண்பர்களால் எதிர் பார்த்த உதவி கிடைக்காது உறவினர்களால் செலவினங்களையும் புதிய பொறுப்புகளையும் ஏற்கவேண்டி வரும். வழக்கின் போக்கில் எதிர்ப்பு அதிகரிக்கும். வெளியூர் பிரயாணம் தாமதித்து நன்மையாக முடியும்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம்பாதம் அனுசம், கேட்டை.)

ராசி நாதன் செவ்வாய் ஆருமிடத்தில் 22ந் தேதி முதல் சஞ்சரிக்கப்போவதால் அதிக உழைப்புடன் கூடிய வாரமாகும். உங்கள் காரியங்கள் அலைச்சல் திரிச்சலின்மேல் அநுகூலமாகவே முடியும். பணத்தட்டுப்பாடு விட்டு விட்டு தோன்றினுலும், கேட்ட இடத்தில் பணம் வரும். கடன் வாங்க வேண்டிய அவசியம் ஏற்படுத்தும். தொழில் துறையில் செவ்வாயின் போக்கு ஊக்கம் தருவதாக அமையாததால் சில தினங்களுக்கு மந்த நிலையே நீடிக்கும். வியாபாரம் புதன் பலத்தால் நல்லபடியாகவே நடக்கும் பாதிக்காது உத்தியோகத்தில் சூரியன் சனியுடன் சேர்ந்து எட்டில் மறைவதால் மேலதிகாரிகளின் வெறுப்புக்கு உள்ளாக வேண்டிவரும். குடும்ப ஒற்றுமை பாதிக்காது உறவினர் நண்பர் போன்ருேர் இனங்களால் உதவியும் ஒத்தாசையும் கிடைக்கும். வெளியூர் பிரயாண காரியங்களில் தாமதித்து காரிய அனுகூலம் ஏற்படும். வழக்கு நல்லபடியாகவே நடைபெறும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம், 1-ம் பாதம்)

ராசிநாதன் குரு சுகஸ்தானத்தில் உன்னத பலம் பெற்றிருப்பதால் இதுவரை இருந்த தொல்லைகள் மறைந்து உங்கள் சொந்த முயற்சிகளில் நல்ல அபிவிருத்தி ஏற்படும் தனுதிபதியும் பாக்கியாதிபதியும் ராசியை சுக்கிரனுடன் பார்ப்பதால் பணத்தட்டுப்பாடு மறைந்து எப்படியும் பணவசதி குறையாது. தொழில் துறையில் எதிர்ப்புகள் மறைந்து புதிய ஒப்பந்தங்கள் ஊக்கம் தருவதாகவே அமையும் உத்தியோகத்தில் நல்லசெய்திகளும் மேலிடத்து ஆதரவும் உண்டு; வியாபாரம் சுமாராகவே நடைபெறுமானுலும் லாபம் குறையாது குடும்ப ஒற்றுமை லேசாக பாதித்து மறையும் பிள்ளைகள் சம்பந்தமான மனக்கவலைகள் தோன்றி மறையும். நண்பர்கள் உறவினர் போன்றவர்களால் எதிர்பார்த்தபடி காரியங்கள் அனுகூலமாக அமையாது. வெளியூர் பிரயாண முயற்சிகளில் வெற்றி வாய்ப்பு தடங்கலின் மேல் காட்டும். வழக்கின் போக்கில் மந்த நிலையே நீடிக்கும்.

## மகரம்

(உத்திராடம் 2, 3, 4-ம் பாதம் திருவோணம் அவிட்டம் 1, 2-ம் பாதம்.)

ராசியை சுக்கிரன் பலமாக கேந்திரதத்தில் அமைந்து ராசியைப் பார்ப்பதால் பிறரால் உங்கள் காரியங்கள் நல்லபடிபடியாக முடியும். கௌரவம் உயரும். வேண்டியவர் சுபகாரியங்கள் இனிது முடியும். பண சம்பந்தமான செய்திகள் ஊக்கம் தருவதாகவே அமையும். தொழில் துறையில் உழைப்பு அதிகரித்து எதிர்பாராத எதிர்ப்புக்களைச் சமாளிப்பீர்கள். உத்தியோகத்தில் செவ்வாய் பார்வையால் வேலைபளு அதிகரித்தாலும் சுக்கிரன் பலத்தால் பாதிக்காது, சிலருக்கு விடுமுறையில் போக வேண்டிய அவசியம் ஏற்படும். வியாபாரம் நல்லபடியாக நடைபெற்று சிறப்படையும். குடும்பத்தில் கணவர் மனைவிகுடும்ப ஒற்றுமை நல்லபடியாக அமையும். உறவினர், நண்பர் போன்றவர்களால் இந்த வாரம் காரிய அநுகூலமும் நன்மையும் உண்டாகும், வெளியூர் பிரயாணம் எதிர் பார்த்தபடி நல்ல படியாக முடியும். வழக்கில் அநுகூலம் காணும். உடல் நலம சனி ஆறில் சூரியனுடன் இருப்பதால் லேசாக பாதித்து குணமுண்டு நல்ல வாரம்.

## கும்பம்

(அவிட்டம் 3, 4-ம் பாதம், சதயம், பூரட்டாதி 1, 2, 3-ம் பாதம்)

ராசிநாதன் லாபாதிபதி சாரமேறி பலம பெற்றதால் எடுத்த முயற்சிகளில் வெற்றியும். சிலருக்கு புதிய வியாபார முயற்சிகளில் அனுகூலமும உண்டு. பணவசதி பாதிக்காது குருபலத்தால் கேட்ட இடத்திலிருந்து பணம வரும தொழில் துறையில் சுக்கிரன் பலத்தால், நல்ல அபிவிருத்தி, சக ஊழியர்களுடன் நட்பு அதிகரித்தல் போன்ற நன்மைகள் உண்டாகும. வியாபாரத்தில் சூரியன் போக்கு லாபத்துடனேயே அமைவதால் நல்ல வியாபாரம் எதிர்பரர்க்கலாம. உத்தியோகத்தில் செவ்வாய் ராசி மாறியபின் 22ந்தேதிக்கு மேல் வெளியூர் மாற்றல் ஏற்பட ஹேதுஉண்டு. கணவர் மனைவிக்குள் குடும்பஒற்றுமை பாதிக்காது. உறவினர், நண்பர் போன்றவர்களுடன் உறவுநிலைகெடுவதுடன் மறைமுக எதிர்ப்புகளும் காட்டும். பிரயாண முயற்சிகள் செவ்வாய் நிலையில் அலைச்சலின் மேல் வெற்றியைத் தரும். வழக்கின்தாமதமானபோக்கு மாதம் முழுதும் உண்டு. உடல்நலம் பாதிக்காது நல்ல வாரம்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி)

ராசியைவிட்டு செவ்வாய் 22ந் தேதி வெளியேறிபின், குரு ராசியில் பலமாக அமைவதால். கிடைக்கும் செய்திகள் ஊக்கம் தருவதாக அமையும் தொழில் எதிர் பார்ப்பவர்களுக்கு நன்மை தரும் செய்திகள் தேடிவரும் பணத்தட்டுப்பாடு தோன்றினுலும், தேவைக்கு பணம் கிடைத்து விடும். குடும்ப கவலைகள் அதிகரிக்கும்உத்தியோகத்தில் அபிவித்தி கரமான போக்கு தடைபடுவதால் திருப்தியிருக்காது வியாபாரம் சிறப்பாகவும் லாபகரமாகவும்நடக்கும் குடும்ப ஒற்றுமை நல்லபடியாக அமைந்து கணவர் மனைவிக்குள் அன்பு அதிகரிக்கும் உறவினர் நண்பர்போன்றவர்களின் வருகை குடும்பத்தில் அதிகரிக்கும் உதவியும் ஆதரவும் ஏற்படும். பிரயாண காரியங்கள் புதன் கேது பலத்தால் நன்மையாக முடியும். வழக்கு மந்த நிலை மாறி சூடு பிடிக்க ஆரம்பிக்கும். உடல் நலம் குரு பலத்தால் நல்லபடியாக இருக்கும் நல்லவாரமாகும்.

# ஜுலை 5-ம் தேதி கலெக்டர்கள் போலீஸ் அதிகாரிகள் மாநாடு

சென்னை, ஜுன் 21—மாவட்டக் கலெக்டர்கள், போலீஸ் அதிகாரிகள்மாநாடு ஜுலை 5, 6ம் தேதிகளில் சென்னையில் நடைபெறும். ஆண்டுதோறும் நடக்கும் இம் மாநாடு இரு நாட்கள் நடைபெறும்.

மாநில வறட்சிநிலை, மேற்கொள்ளப்பட்ட நிவாரணப் பணிகள், அளித்துள்ள பலன், உணவு நிலைமை, சட்டம், ஒழுங்கு, அமைதி பராமரிப்பு ஆகியவை குறித்து விவாதிக்கப்படும்

இந்த இரண்டுநாள் மாநாட்டில் வருவாய்த்துறை வாரிய உறுப்பினர்களும் அரசு செயலாளர்களும் கலந்து கொள்வார்கள்.

ஜுலை 5 6 சனி; ஞாயிறு இரு நாட்கள் ராஜாஜி மண்டபத்தில் நடைபெறும்.

இந்த மாநாட்டிற்கு தமிழக முதல்வர் கருணாநிதி தலைமை வகிப்பார். கவர்னர் கே. கே. ஷா துவக்கி வைப்பார், மாவட்டக் கலெக்டர்கள், மாநில துணை இன்ஸ்பெக்டர் ஜெனரல்கள், மாவட்டப் போலீஸ் அதிகாரிகள் கலந்து கொள்வார்கள்.

# புதுவையில் தி. மு. க "எழுச்சி நாள்" கூட்டம்

புதுவை, ஜுன் 21—பாண்டிச்சேரி ஒதியஞ்சாலை மைதானத்தில் தி. மு. க. எழுச்சி நாள் பொதுக்கூட்டம் நடைபெற்றது தி. மு. கழக மாநில அமைப்பாளர் எம். ஏ. சண்முகம் பேசுகையில் வேலை வாய்ப்பு அளிப்பதில் பாண்டிச்சேரியைசேர்ந்தவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்பட வேண்டும் என்றும் தி. மு. கழக ஆட்சியில் இருந்தபோது சிபாரிசு செய்த திட்டங்களை உடனடியாக நிறைவேற்ற வேண்டும் என்றும் கூறினுர்.

## ரூ. 5 ஆயிரம் நிதி உதவி

அவர் முத்தியால்பேட்டையில் பாத்திமா ஆண்கள் உயர்நிலைப்பள்ளிக்கூட கட்டிட நிதிக்கு எம். ஏ. சண்முகத்தின் மகன் செல்வநாயகம் நினைவாக ரூ. 5 ஆயிரத்தை பாதிரியாரிடம் தமிழக சமூக நலத்துறை அமைச்சர் சி. வி. எம். அண்ணாமலை முன்னிலையில் கொடுத்தார்.

தமிழக சமூகநலத்துறை அமைச்சர் சி. வி. எம். அண்ணாமலை கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினுர். அவர்பேசுகையில் அலகாபாத் ஐகோர்ட்டு தீர்ப்பை கேட்டவுடன் பிரதமர் இந்திரா காந்தி ராஜினாமா செய்திருக்கவேண்டும் செய்து இருந்தால் மற்றவர்களுக்கு வழி காட்டியாக இருக்கும் என்று கூறினுர்.

# ஹைகோர்ட் தீர்ப்பு: நிறுத்திவைக்க இந்திரா கூறிய 12 காரணங்கள்

புதுடெல்லி, ஜூன் 21—மக்கள் சபைக்கு ரேபரேலி தொகுதியில் இந்திரா காந்தி தேர்ந்தெடுக்கப் பட்டது செல்லாது என்று அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பு அளித்தது அல்லவா? அந்த தீர்ப்பை நிபந்தனையற்ற முறையில் முழுமையாக நிறுத்திவைத்து தடை உத்தரவு பிறப்பிக்க சுப்ரீம் கோர்ட் முன்வர வேண்டும் என்று பிரதமர் இந்திரா கோரியுள்ளார்.

அதற்காக இந்திராவின் மனுவில் 12 காரணங்கள் கூறப்பட்டுள்ளன.

நீதியின் நலனை மட்டுமின்றி பிரதம மந்திரி வகித்து வரும் பதவியைக் கருதி, தேசிய நலனை முன்னிட்டு இத்தகைய தடை அவசியமாகும் என்று ஹைக்கோர்ட் தீர்ப்பு அமுலை நிறுத்திவைக்கக்கோரும் இந்திராவின மனு கூறுகிறது.

ரேபரேலியிலிருந்து இந்திரா காந்தி தேர்ந்தெடுக்கப் பட்டதை ஆட்சேபித்து, 1971 ஏப்ரலில் மனு தாக்கல் செய்யப்பட்டது; நான்கு வருடங்களுக்கு பிறகு தீர்ப்பு வழங்கப் பட்டுள்ளது. அப்பீல் தாக்கல் செய்யப்படும் தேதியிலிருந்து அது இறுதியாகப் பைசல் செய்யப்படும் வரையில் நிபந்தனையற்ற தடை வழங்குவதால் குந்தகம் ஏற்பட்டு விடாது. அதற்கு மாருக நிபந்தனையற்ற தடை வழங்கப்படா விட்டால், அப்பீல் தாரருக்கு மட்டுமின்றி நாட்டுக்கே கடுமையான விளைவுகள் ஏற்படும் என்று இந்திராவின் மனுவில் கூறப்பட்டுள்ளது.

மனுவில் மேலும் கூறப்பட்டிருப்பதாவது:—

இந்திரா காந்திக்கு நாடாளு மன்றத்தில் பெரும்பான்மையான மெஜாரிட்டி இருக்கிறது. தார்மீகச் சீர்குலைவு எதுவும் சம்பந்தப்படாததாலும். நுட்பத் தன்மை வாய்ந்த இரண்டு காரணங்கள் பேரிலேயே இந்திரா காந்தியின் தேர்தல் செல்லாது என்று அறிவிக்கப்பட்டிருப்பதையும் கருதி, இந்த அப்பீல் இறுதியாகப் பைசல் செய்யப்படும் வரை அப்பீல் தாரர் தொடர்ந்து பிரதமராகவும், மந்திரிசபை அங்கத்தினராகவும் நீடிப்பதற்குச் சாதகமாகவே சௌகரிய நிலைமை உள்ளது".

ஜுன் 12-ந் தேதி, தாம் தீர்ப்பு அளித்த தேதியிலிருந்து 20 நாட்களுக்கு அல்லது அதை எதிர்த்து அப்பீல் தாக்கல் செய்யப்படும் நாள் வரை—இதில் எது முன்பு வருகிறதோ அந்த நாள் வரை—அலகாபாத் ஹைகோர்ட் நீதிபதி தன்னுடைய தீர்ப்புக்கு வழங்கிய முழு நிபந்தனையற்ற தடையை நீடிக்கும்படி சுப்ரீம் கோர்ட்டை மனு கேட்டுக் கொள்கிறது.

## 12 காரணங்கள்

அலகாபாத் ஹைகோர்ட்டு தீர்ப்பை ஆட்சேபித்து அப்பீலுக்கு பிரதமர் சார்பில் 12 காரணங்கள் கூறப்பட்டுள்ளன. மனுவில் கூறப்பட்டதாவது:—

யஷ்பால் கபூர் 1971 ஜனவரி 14ந்தேதி யன்றும், அதற்குப் பிறகும் அரசாங்க உத்தியோகத்தில்இருந்தார் அல்லது எந்தத் தேதி வரை அவர் அரசாங்க உத்தியோகத்தில் இருந்தார் என்பதை முடிவு செய்வதில் கோர்ட் தவறு புரிந்துவிட்டது.

யஷ்பால் கபூரின் ராஜிநாமா 1971 ஜனவரி 25ந் தேதிதான் ஏற்றுக் கொள்ளப் பட்டது; எனவே, அதுவரை அரசாங்க உத்தியோகத்தில் இருந்திருக்கிருர், என்று ஹைகோர்ட் முடிவு செய்தது தவருகும் 1971 ஜனவரி 13-ந் தேதியன்றே யஷ்பால் கபூர் தம்முடைய ராஜிநாமா கடிதத்தைச் சமர்ப்பித்துவிட்டார் என்பதைத் தெரிந்துகொண்ட ஹைகோர்ட் உண்மையான விவரங்களின் அடிப்படையிலும் வழக்கின் சந்தர்ப்ப சூழ்நிலைமைகளிலும் 1971 ஜனவரி 25-ந் தேதியிட்ட அரசாங்க அறிக்கையில் காணப்பட்டபடி அன்றைய தினமே (ஜனவரி 13-ந் தேதி) ராஜிநாமா ஏற்கப்பட்டு, 1971 ஜனவரி 14-ந் தேதியிலிருந்து அரசாங்க உத்தியோகத்தில் இல்லை என்று ஹைகோர்ட் முடிவு செய்திருக்கவேண்டும்.

அப்பீல்தாரர் (இந்திரா காந்தி) ஊழல் குற்றத்தைப் புரிந்தாரா என்பதை முடிவு செய்ய யஷ்பால் கபூர் ராஜிநாமா செய்த தேதி 1971 ஜனவரி 13 என்று ஹைக்கோர்ட் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும் அப்பீல் தாரருக்குத் தெரிந்தே கபூர் ராஜிநாமா செய்தார். அவருடைய நேர்மையான நம்பிக்கைப்படி! கபூர் அரசாங்க உத்தியோகஸ்தரல்ல கபூர் அரசாங்க உத்தியோகத்திலிருந்த போதே 1971 ஜனவரி 7-ந் தேதி யன்று அல்லது வேறு எந்தத் தேதியிலோ கபூரின் உதவியைப் பெறவோ அல்லது நாடவோ இல்லை என்று ஹைக்கோர்ட் முடிவுக்கு வந்திருக்க வேண்டும்.

1971 பிப்ரவரி 13-ந் தேதி யன்றும், 1971 பிப்ரவரி 25-ந் தேதியன்றும் இந்திராகாந்தி பேசிய கூட்டங்களுக்கு மேடைகளை யமைப்பதற்கும், ஒலி பெருக்கிக்கான மின்சார சட்டுளையை ஏற்பாடு செய்வதற்கும் மாநில அரசு அதிகாரிகளின் குறிப்பாக மாவட்ட மாஜிஸ்திரேட், பொதுப்பணித்துறை நிர்வாக என்ஜீனியர், நீர் நிலை மின்சார ஆலாகா என்ஜினியர், போலீஸ் சூப்பிரெண்ட் ஆகியோரின் உதவியை இந்திரா காந்தி பெற்ருர் என்ற முடிவுக்குவந்ததிலும்ஹைகோர்ட் தவறு புரிந்து விட்டது.

இந்திரா காந்தியின் தேர்தல் வாய்ப்புக்களை அதிகரிக்கவே இந்த உதவி நாடப்பட்டது. எனவே மக்கள் பிரதிநிதித்துவ சட்டத்தின் கீழ் ஊழல் நடைமுறையைக் கடைப்பிடித்த குற்றத்தைப் புரிந்தவர் ஆவார் என்று முடிவு செய்ததிலும் ஹைகோர்ட் தவறு புரிந்துவிட்டது எந்த உதவியையும் அப்பீல்தாரர் பெறவோ, அல்லது நாடவோ இல்லை என்று ஹைகோர்ட் முடிவுக்கு வந்திருக்கவேண்டும். உதவி ஏதாவது பெறப்பட்டிருந்தால், இவ்வாறு பெறப்பட்டதாகக் கூறப்படும் உதவி அரசாங்க உத்தியோகத்திலுள்ள நபர்களிடமிருந்து பெறப்படவில்லை; மாநில அரசிடமிருந்தே பெறப்பட்டது. (அரசு ஊழியர்களுக்கும், அரசுக்கும் இடையே வித்தியாசம் உள்ளது என்பது தெளிவு) என்று அப்பீ கூறுகிறது மேலும் இந்த உதவி அப்பீல்தாரரின் தேர்தல் வாய்ப்புக்களை அதிகரிப்பதற்காக அல்ல எனவே அப்பீல்தாரர் ஊழல் முறையைக் கையாண்ட குற்றத்தைப் புரியவில்லை.

அலஹாபாத் ஹைகோர்ட் தீர்ப்பு நிராகரிக்கப்படவேண்டும் அப்பீல் அனுமதிக்கப்பட வேண்டும் அப்பீல்தாரர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட வேண்டும் ஹைகோர்ட்டிலும் சுப்ரீம் கோர்ட்டிலும் அப்பீல்தாரருக்கு வழக்குச் செலவு அனுமதிக்கப்பட வேண்டும்

அப்பீல்தாரருக்கு பார்லிமெண்டில் பெரும்பான்மையான மெஜாரிட்டி இருப்பதாலும் மிகப்பெரும்பான்மையான மக்களின் ஆதரவு இருப்பதாலும் நீதியின் நலனைக் கருதியும் பொதுஜன முக்கியத்துவத்தைக் கருதியும் பிரதமரின் அப்பீலை துரிதமாகப் பைசல் செய்யவும் அப்பீல் கோருகிறது.

# மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் வழங்க புதிய முறை

திருச்சி, ஜுன் 21—கல்லூரி முதல்வர்களே ஸ்காலர்ஷிப்புகளை புதுப்பிக்கும் ஒரு புது முறையை தமிழக அரசு இந்த ஆண்டிலிருந்து கொண்டு வந்துள்ளது.

தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மாணவர்களுக்கு வழங்கப்படும் ஸ்காலர்ஷிப் தொகைகளை விரைவில் வழங்குவதற்காக இந்த புதிய திட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது.

இந்த புது திட்டத்தின்படி கல்லூரி முதல்வர்களே மாணவர்களின் ஸ்காலர்ஷிப்புகளை புதுப்பித்து அவர்களை நேரடியாக ஸ்காலர்ஷிப் தொகைகளை வழங்குவார்கள்.

முந்தைய ஆண்டின் செலவுத் தொகையில் 90 சதவீதம் ஸ்காலர்ஷிப் புதுப்பின்போது மாவட்ட நல அதிகாரி மாவட்டப் பிற்படுத்தபட்டோர் நல அதிகாரி ஆகியோரால் வழங்கப்பட்டு, வந்தது அந்த தொகையை மாணவர்களுக்கு வழங்குவது அந்தந்த கல்லூரிகளின் முதல்வர்களிடம விடப்படும.

புது ஸ்காலர்ஷிப்புகள் வழங்க ஒவ்வொரு, மாவட்டத்திலும் இயங்கும் குழுக்கள் நிறுவப்பட்டு அந்த குழுக்கள் ஜுலையிலிருந்து ஒவ்வொரு கல்லூரிக்கும் சென்று ஸ்காலர்ஷிப் விண்ணப்பங்களை மாணவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளும விண்ணப்பங்கள் அந்தநத இடங்களிலேயே பரிசீலனை செய்யப்பட்டு பிழைகள் இருந்தால் அங்கேயே சரி செய்யப்படும்,

இந்த "இடங்கும்குழு" ஒரு தாசில்தாரின் தலைமையில் இயங்கும். அவருக்கு 3 உதவியாளர்களும இருப்பர். இவர்கள் அவர்களுடைய பகுதிகளில் உள்ள கல்லூரிகளுக்கு சென்று விண்ணப்பங்களைப் பெறுவர்.

இந்த குழு மாதத்திற்கு 1500 முதல் 2000 விண்ணப்பங்கள் வரை பரிசீலனை செய்யும். இந்த வேலைகள் அனைத்தும் ஆகஸ்ட் மாதம் இறுதிக்குள் முடிந்துவிடும்.

தமிழகத்தில் கல்லூரிக் கல்வித்துறையின் மூலம் ஒவ்வொரு ஆண்டும் சுமார் ஒரு கோடி ரூபாய் ஸ்காலர்ஷிப் வழங்கப்படுகிறது.

